# உத்தர காமிகாகமம்

## தமிழ் மொழிபெயர்ப்பு

மூலாகம மொழி பெயர்ப்புடன்

K.R.K



Sri Arthanareesvara Murthi

இந்து சமய அறநிலையத்துறை-சென்னை

தமிழக அரசு வெளியீடு

No. 1

"மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உன்னறும் முகங்களாற் பணித்தருளியும்"

என்பது திருவாசகம்

சிவபெருமானின் மேற்கு நோக்கிய சத்யோஜாதம் எனும் முகத்திலிருந்து காமிகம், யோகஜம், சந்தியம், காரணம், அஜிதம் ஆகிய ஐந்து ஆகமங்கள் தோன்றியுள்ளன.

சிவபெருமானின் வடக்கு நோக்கிய வாமதேவம் எனும் முகத்திலிருந்து தீப்தம், சூட்சுமம், சகஸ்ரம், அம்சுமான், சுப்ரபேதம் ஆகிய ஐந்து ஆகமங்கள் தோன்றியுள்ளன.

சிவபெருமானின் அகோரம் எனும் தெற்கு முகத்திலிருந்து விஜயம், நிச்வாசம், சுவாயம்புவம், அனலம், வீரம் ஆகிய ஐந்து ஆகமங்கள் தோன்றியுள்ளன.

சிவபெருமானின் கிழக்கு நோக்கிய தத்புருஷம் எனும் முகத்திலிருந்து ரௌரவம், மகுடம், விமலம், சந்த்ரஞானம், பிம்பம் ஆகிய ஐந்து ஆகமங்கள் தோன்றியுள்ளன.

சிவபெருமானின் மேல் நோக்கிய 'ஈசானம்' எனும் திருமுகத்திலிருந்து புரோத்கீதம், லலிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேஸ்வரம், கிரணம், வாதுளம் ஆகிய எட்டு ஆகமங்கள் தோன்றியுள்ளன.

சிவபெருமான் முக்கியமான ஒன்பது ஆகமங்களை நந்திபெம்பெருமானுக்கு உணர்த்த நந்தி அவற்றைத் தகுதியுடைய தம் மாணாக்கர்களுக்கு உணர்த்தியருளினார் என்பதைத் திருமூலர் திருமந்திர நூலில் எடுத்துரைத்திருக்கக் காண்கின்றோம்.

"சிவமாம் பரத்தினில் சத்தி சதாசிவம்
உமைமா மகேசர் உருத்திரதேவர்
தவமால் பிரமன் தம்மிற் றாம்பெற்ற
நவ ஆகமம் எங்கள் நந்தி பெற்றானே"

"பெற்றநல் ஆகமம் காரணம் காமிகம்
உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்
மற்றவள் வியாமளம் ஆகுங்காலோத்தரம்
துற்றநற் சுப்பிரம் சொல்லும் மகுடமே"

எனவரும் திருமந்திரப் பாடல்களைக் காண்க.

ஆகமம் என்பதனை விளக்கும் பெயர்களாகவே தந்திரம், சம்ஹிதா, பகவத் சாஸ்திரம் ஆகியனவும் விளக்குகின்றன.

தந்திரம் என்பதற்கு மிகவும் தொன்மை வாய்ந்தது எனப் பொருள் விளக்கம் கூறுகின்றனர்.

ஒன்பது ஆகமங்களின் விளக்கமாக விளங்கும் திருமந்திரம் "தந்திரம்" என்ற தலைப்பிலேயே அவற்றை விளக்கியிருப்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.

ஆகமங்களில் பலவகையான இறைவழிபாட்டு முறைகள் விளக்குமுறக் காணப்படுகின்றன.

அவற்றின் விபரம் பின்வருமாறு

1. அக வழிபாடு
2. புற வழிபாடு
3. உருவ வழிபாடு
4. அருவ வழிபாடு
5. அரு உருவ வழிபாடு

6. குரு வழிபாடு
7. லிங்க வழிபாடு
8. எந்திர வழிபாடு
9. கும்ப வழிபாடு
10. ஆலய வழிபாடு
11. ஆத்மார்த்த வழிபாடு

இவற்றைச் சரியாபாதம், கிரியா பாதம், யோகபாதம், ஞானபாதம் எனும் 4 உட்பிரிவுகளாக ஆகமங்கள் விளக்குகின்றன.

இறைவனிடமிருந்து வெளிப்பட்ட ஞான நூல்களான ஆகமங்கள் இவ்வாறு இறைவனைப் பற்றியும், இறைவனது வழிபாட்டு முறைகளைப் பற்றியும் இறைவனது அவதாரங்கள், தத்துவங்கள், சிற்ப, சாஸ்திரக் கலையில் இறைவனின் உருவ அளவுகள், ஆலயக் கட்டடக்கலை அமைப்புகள், ஜீர்ணோத்தாரண முறைகள், பூஜை விதிமுறைகள், திருக்கோயிலை மையமாக வைத்துக் கிராம அமைப்பு முதலிய அனைத்து விவரங்களையும் மிக விளக்கமாக கூறி நம்மை நெறிப்படுத்துகின்றன.

வேதங்கள், உபநிடதங்கள், ஆகமங்கள் மற்றும் தந்திரங்கள் இந்து மதத்தின் நிலையான தூண்களாகும். எனவே, ஆகம நூல்களை நம் செந்தமிழ் மொழியில் தக்க ஆகம வல்லுநர்களைக் கொண்டு இந்து சமய அறநிலையத்துறை வெளியிட பல ஆண்டுகளுக்கு முன் முயற்சிகளை மேற்கொண்டுள்ளது.

இம்முயற்சியில் முதல் நூலாக "உத்தர காமிக நூல்' வந்துள்ளது.

"உத்தர காமிக ஆகமம்" எனும் நூல் 1201 பக்கங்களில் மிகப் பெரிய நூலாக வெளியிடப்படுகின்றது. ஆங்காங்கே தேவையான விளக்கப் படங்கள் அமைந்து இருப்பது பாராட்டிற்குரியது.

"எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவனார் தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை"

என்ற தெய்வச் சேக்கிழார் வாக்கிற்கிணங்க இந்த "உத்தர காமிக ஆகம" நூலில் இறைவனின் பூசனை முறைகள் நன்கு விவரிக்கப்பட்டுள்ளன.

சிவநெறியில் ஈடுபாடு உள்ளவர்கள் படித்துப் பயன் பெற வேண்டிய இப்பயன்மிகு நூல் ஒவ்வொரு திருக்கோயிலிலும் இருக்க வேண்டிய ஒப்பற்ற நூல் என்பதில் ஐயமில்லை.

எல்லாம் வல்ல இறைவனை மண்ணில் நல்ல வண்ணம் மாந்தர் திருக்கோயில்களின் வழி வழிபாட்டு உய்ய வழிகாட்டும் "உத்தர காமிக நூலை" நமக்கு நம் தமிழ் மொழியில் விளக்கவுரை எழுதி வழங்கியுள்ள சிவாகமச் செம்மல் அல்லூர் சிவாச்சார்யார் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்து மகிழ்கின்றேன்.

"ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள் வாழ்க"

என எல்லாம் வல்ல எம்பெருமான் திருவடிகளைப் போற்றி இவ்வரிய நூல் வெளியீட்டிற்கு ஊக்கமுடன் உழைத்துப் பாடுபட்ட அனைத்து அன்பர்களுக்கும் என் மனம் நிறைந்த பாராட்டுகளைத் தெரிவித்து மகிழ்கின்றேன்.

அன்புள்ள

(சுகவனேஸ்வரி)
சிறப்பு ஆணையர் மற்றும் ஆணையர்

'சிவாகம கலாநிதி'
**V. விச்வநாத சிவாச்சாரியார்,**
ஸ்ரீகாஞ்சி காமகோடி பீட வ்யாஸ,
பாரத கலாதி ஸதஸ் ஸமாஜ
வேத சிவாகம பாடசாலை,
அல்லூர் அஞ்சல், திருச்சி மாவட்டம்.



य: कामिकादि विनिवेदित तत्व रूप:
तत्त त्व बोध पशुपाश विमोचको य:
नारायणी भुज लताञ्छित कण्ठ देश:
भक्ति समे दिशतु नैज पदारविन्दे

## ஆகமம் ஆகி நின்று அண்ணிப்பான் தான் வாழ்க

எங்கும் நிறைந்த பரம்பொருளான ஈச்வரன் எல்லா ஆன்மாக்களும் உய்ய வேண்டி கருணையினாலே இருபத்தெட்டு (28) சிவாகமங்களை அருளிச் செய்தார். இந்த இருபத்தெட்டு மூலாகமங்களில் காமிகாகமம் என்பது முதலாவது ஆகும். அந்த மூலாகமம் பூர்வபாகம், உத்தர பாகம் என்று இரு பிரிவாக இருக்கின்றது. பூர்வகாமிகாகமம் என்ற ஒரு பகுதியை சென்னை ஷண்முக சுந்தர முதலியார் அவர்கள் சித்தாத்ரிப் பேட்டை சிவஞான போத இயந்திர சாலையில் தமிழ் உரையுடன் பதிப்பிட்டு வெளியிட்டார். அதில் தந்த்ராவதாரம் முதல் கோபுர ஸ்தாபனம் வரை (74) எழுபத்தி நான்கு படலங்களை உடையது. சஞ்சிகையாக வெளியிட்டு உருவாக்கப்பட்டது. (100) நூறு ஆண்டுகளுக்கு முன்னால் சைவ உலகிற்கு பெரும் உதவியை செய்திருக்கிறார். அவருக்கு நாம் என்றும் நன்றி கடமை பட்டிருக்கிறோம். அடுத்து உத்தர காமிகாகமம் தென்னிந்திய அர்ச்சக சங்கம் மூலம் மட்டும் நாகரலிபியில் அச்சிட்டு வெளியிட்டது. பல ஆண்டுகளாக அந்த உத்தர காமிகாகமம் தமிழாக்கம் செய்து வெளியிட வேண்டும் என்ற எண்ணம். முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போல் எனக்கு இருந்ததை தமிழக அரசு நிதி உதவி செய்து ஊக்கம் அளித்து செயல்பட செய்தது. அதற்கு ஓர் வல்லுநர் குழு அமைத்து செயல்பட்டு பூர்த்தியாகி உள்ளது.

*ஸ்லோகத்தையும் தமிழில் பொருள் எழுத உதவியவர்கள்*

1. சுந்தரேச சிவாச்சாரியார் - *திருவையாறு அரசினர் கல்லூரி ஸம்ஸ்க்ருத பேராசிரியர் (ஓய்வு)*
2. சிவாகம ப்ரவீணா - சிவ ஸ்ரீ ஸூக்ஷ்ம ப்ரீஸ்வர சிவாச்சாரியார் *ஸம்ஸ்க்ருதம்* B.A.B.Ed.
3. சிவஸ்ரீ M.நாகராஜ சிவாச்சாரியார், *சிறுதையூர்,*
4. S. சந்திரசேகர குருக்கள் S/o S. சுந்தரேச குருக்கள் *ஸ்ரீரங்கம்*
5. பத்மஸ்ரீ S.M.கணபதி ஸ்தபதியார் *காஞ்சிபுரம்*

உத்தரகாமிகாகமம் 98 படலங்கள், ஸ்லோகங்கள் - 7128 பக்கங்கள் - 1011, படங்கள் - 110, உத்தரகாமிகாகமம் த்வார பூஜையை ஆரம்பித்து, உத்ஸவ விதி, பாதபூஜா விதி, தீக்ஷா விதி, ப்ராயஸ்சித்த விதி, பீடப்ரதிஷ்டை, பாணலிங்க ப்ரதிஷ்டை, காம்யலிங்க ப்ரதிஷ்டை, ஸகல தேவதா ப்ரதிஷ்டைகள், ரதாதி ஸ்தாபனங்கள், பிரதிஷ்டை படலங்கள், சகலவிதமான தானங்கள், விவரமாக கூறி திருக்கோயில்களில் செயல்பட வேண்டிய காரியங்களை வலியுறுத்தி விவரமாக கூறப்பட்டிருக்கிறது. பல சுலோகங்களுக்கு ஆழ்ந்த கருத்துக்களை சிந்தித்து சில ஆண்டு காலம் சிரமப்பட்டு உருவாக்கப் பட்டுள்ளது. இப்புஸ்தகம், திருக்கோயில்களில் சிவாகமமுறை வழுவாது எல்லா காரியங்களும், மங்களகரமாக நடக்குமானால் மக்கள் அனைவருடைய குடும்பங்களிலும் மகிழ்ச்சியான அமைதியான வாழ்வு கிடைக்கும்.

*வேதமொடு ஆகமமும் மெய்யாம் இறைவன் நூல்*
*வேதம் பொது ஆகமம் சிறப்பு.*

என அறுவாழி நூல்களில் கூறப்பட்டுள்ளது. ஆகம முறைகளை அனைத்து மக்களும் கடைப்பிடிக்க வேண்டும். சிவாகமங்களில் கூறப்பட்டுள்ள சிவதீக்ஷை செய்து கொண்டு தினந்தோறும் அனைவரும் ஆன்மார்த்த பூஜை செய்ய வேண்டும். நமச்சிவாய வாழ்க!! நாதன் தாள் வாழ்க! இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்கா தான் தாள் வாழ்க! என்ற மணிவாசக பெருமானின் திருவாக்கியத்தின்படி உணர்ந்து ஐந்தெழுத்தை அதன் சிறப்பை உடன் உணர்ந்து கொள்ள வேணும். இந்த உத்தர காமிகாகமம் தமிழில் அர்த்தத்துடன் கூடிய நூலானது, ஆன்மீக பெருமக்களுக்கும், சிவாச்சாரிய பெருமக்களுக்கும், மிகவும் பயனை கொடுக்க கூடியதாகும்.

உத்தர காமிகாகம நூல் முழுமையும் தமிழ் அர்த்தத்துடன் புத்தக வடிவிலே வெளியாவதற்கு நிதி உதவி முதலிய எல்லா உதவிகளையும் செய்து உறுதுணையாக இருந்த தமிழக அரசு அறநிலையத் துறைக்கு நன்றி! நன்றி! நன்றி!

இதே போன்று வடமொழியில் உள்ள புஸ்தகங்களை தமிழ் அர்த்தமுடன் எழுதி வெளியீடு செய்ய நிதி உதவி முதலிய எல்லா உதவிகளையும் செய்து தமிழ் அர்த்தமோடு கூடிய புத்தகங்கள் வெளிவர ஆவன செய்ய வேணுமாய் வேண்டி விரும்பி கேட்டுக் கொள்கிறேன். இந்த வெளியீடு செய்வதற்கு கிடைத்த நூல்கள் சென்னை அழகப்ப முதலியார் அச்சகத்தில் அச்சடிக்கப்பட்ட கிரந்த எழுத்து புத்தகம் தென்னிந்திய அர்ச்சக சங்கம் நாகர எழுத்தில் வெளியீடு செய்த புத்தகம், கிரந்த எழுத்தில் எழுதிய பனை ஓலை சுவடி புத்தகம் முதலியன.

உ

Phone : (04112) 22115
Fax : (04112) 24305

Sri Chandramouleeswaraya Namaha :
Sri Sankara Bhaghavadpadacharya Paramparagatha :

**His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi**

# Jagadguru Sri Sankaracharya Swamigal

**SRIMATAM SAMSTHANAM**

**No. 1, Salai Street, Kancheepuram - 631 502.**

CAMP : காஞ்சிபுரம் DATE :18 - 1 - 1999



ஆகம சாஸ்திரத்தில் ப்ரஸித்தமானதும் முக்யமானதுமான காமிகாகம் என்ற நூலின் பூர்வபாகம் ஏற்கனவே அச்சாகி உபயோகத்தில் இருக்கிறது. 98 படலங்களைக் கொண்ட உத்தரகாமிகாகமம் என்ற நூலை நமது அல்லூர் ஆகம பாடசாலையின் முதல்வர் விஸ்வநாத சிவாசாரியார் தந்த்ராவதாரம் முதல் கோபுரஸ்தாபனம் வரை 98 படலங்களையும் தமிழக அரசு நிதி உதவியுடனும் அரசாங்கத்தால் அமைக்கப்பட்ட வல்லுநர்களின் ஸகாயத்துடனும் தமிழில் மொழி பெயர்த்து 110 மூர்த்தங்களின் படவிளக்கத்துடன் அச்சிட்டு வெளியிட விருப்பதையறிந்து மிகவும் ஸந்தோஷிக்கிறோம்.

இந்நூல் சிவாசாரியார் அனைவருக்கும் மிகவும் உபகாரமாக அமைந்திருக்கிறது. இந்நூலின் வாயிலாக அனைத்து சிவாசார்யர்களும் பயனடைந்து தேவாலய பூஜைகளை ஆகம முறையாக செய்து அதன் மூலம் பகவான் திருப்தி அடைந்து அவனருளால் உலக மக்கள் அனைவரும் ஸகல மங்களங்களையும் அடைந்து பரமக்ஷேமமாக வாழவேண்டும் என்று ஆசீர்வதிக்கிறோம்.

நாராயணஸ்ம்ருதி:

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்



ஆதீன கர்த்தர் அவர்கள்
திருவாவடுதுறை ஆதீனம்

திருவாவடுதுறை - 609 803
(நாகை மாவட்டம்)

நாள் : 19.01.199

"நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள் வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க"

## வாழ்த்துரை

"ஆகமமாகி நின்று அண்ணிப்பான்தாள் வாழ்க" என்பது மணிவாசகம். ஆகமம் என்பது சிவாகமம். வேதம் பொது நூல். சிவாகமங்கள் சிறப்பு நூல்கள் ஆகும். உலக மக்கள் பலவகைப்பட்ட அறிவினையும் கொள்கையினையும் உடையவர்களாதலால் அவ்வெல்லோரையும் காக்க வேண்டும் என்ற கருணையினால் சிவபரம்பொருள், அவரவர் பக்குவத்திற்கு தக்கவாறு வேதங்களை அருளிச் செய்தார். மிக்க பக்குவம் பெற்ற ஆன்மாக்களின் பொருட்டு அருளப்பெற்றவை சிவாகமங்கள். வேதங்களில் பாலில் நெய் போல விளங்காது நிற்கும் இறைவனது உண்மை இயல்பு, சிறப்பு நூல்களாகிய சிவாகமங்களில் தயிரில் நெய் போல இனிது விளங்கி நிற்கும். ஆதலால் "ஆகமமாகி நின்று அண்ணிப்பான்" என்று அருளிச் செய்தார்கள். அண்ணித்தல் என்பதற்கு இனித்தல் என்பது பொருள்.

இருபத்தெட்டு ஆகமங்களில் முதல் ஆகமம் காமிகம். இவ்ஆகமம், பூர்வம் உத்திரம் என இரு பாகங்களாக உள்ளது. பூர்வகாமிகாகமம் தமிழாக்கம் பெற்றுள்ளது. உத்திரகாமிகாகமம் தற்பொழுது தமிழில் பொருள்கொண்டு வெளிவருதல் பெரிதும் பாராட்டுக்குரியது.

தமிழ் நலம் பேணும் நமது தமிழக அரசின் நல்லுதவிகொண்டு உத்திர காமிகாகமத்தை ஸ்ரீகாஞ்சி காமகோடி வியாச பாரத கலாநிதிதல் சமாஜ வேத சிவாகம பாடசாலை முதல்வரும் நமது அன்பிற்கும் பாராட்டுதலுக்கும் உரியவர்களுமாகிய "சிவாகம கலாநிதி" டாக்டர் அல்லூர் சிவத்திரு வி.விஸ்வநாத சிவாச்சாரியார் அவர்கள் சிவாகம வல்லுநர்களைக் கொண்ட குழுவின் துணை கொண்டு தமிழில் உரை செய்து காமிகாகம உத்திரபாகத்தினை நல்லவண்ணம் பதிப்பித்து வெளிவரச் செய்தல் மகிழ்ச்சியளிக்கிறது.

மூல ஆகமத்தின் விஷயங்களை யாவரும் எளிதில் உணர்ந்து பயன் கொள்ளும் வண்ணம் மூலநூல் கருத்துக்கு மாறுபாடு இன்றி வெளியிடப்பெறும், இந்நூலினைச் சைவ உலகம் பெற்று ஓதியுணர்ந்து ஒழுகி மேன்மைபெற அருள்தரு ஞானமா நடராசப் பெருமான் திருவடி மலர்களைச் சிந்திக்கின்றோம்.

"அருளாணையின் வண்ணம்"

குருவருள் பணியில்

குமாரசாமித் தம்பிரான்

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்
26 வது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்



தருமபுரம்
மயிலாடுதுறை (அஞ்சல்) 609 001
நாள் : 17.08.1995

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே"

"அம்மானே ஆகம சீலர்க் கருள்நல்கும்
பெம்மானே பேரருளாளன் பிடவூரன்
தம்மானே தண்டமிழ்நூல் புலவாணர்க் கோர்
அம்மானே பரவையுண் மண்தளி அம்மானே."

- சுந்தரமூர்த்தி சுவாமிகள்

ஞானம், பரஞானம் அபரஞானம் என இருவகைப்படும். சிவபெருமானுடைய திருவருளினாலே ஞானம் கைவரப்பெறுதல் பரஞானம் என்றும், வேத ஆகமாதி சாத்திர நூல்களினால் அறியப்பெறும் ஞானம் அபரஞானம் என்றும் காமிகாகமத்தில் கூறப்படுகிறது. பரஞானம் என்பது மெய்ஞ்ஞானம் எனப்படும். அபரஞானம் என்பது கலைஞானம் எனப்படும். உமாதேவியார் ஞானசம்பந்தருக்கு ஞானப்பால் வழங்கியபோது அவர் இவ்விருஞானமும் ஒருசேரக் கைவரப்பெற்றார். அஃதாவது உவமையிலாக் கலைஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமுமாகிய இரண்டையும் ஒருங்கே பெற்றார் என்பது சேக்கிழார் திருவாக்கு.

அநாதிமலபந்தமுடையவர்களாகிய ஆன்மாக்கள் ஞானம் பெற்று ஈடேறும் பொருட்டு அநாதிமலமுத்தராகிய சிவபெருமான் அருளிச் செய்ததே வேதாகமங்களாகும். சிவபெருமானுடைய ஐந்து திருமுகங்களில் ஈசான முகத்திலிருந்து 28 ஆகமங்களும், தற்புருட முகத்திலிருந்து ருக்வேதமும், அகோரமுகத்திலிருந்து யஜுர் வேதமும் வாமதேவ முகத்திலிருந்து சாம வேதமும், சத்யோஜாத முகத்திலிருந்து அதர்வண வேதமும் தோன்றின என்பது வேத ஆகமங்களின் முடிவு. ஆகமம் என்பது ஆ - சிவஞானம், க - மோக்ஷ சாதனம், ம - மலநாசனம் என்பது பொருள். எனவே மும்மலங்களையும் நாசம் செய்து மோக்ஷ சாதனமாகிய சிவஞானம் கிடைக்கச் செய்வது ஆகமமாகும். இந்த ஆகமங்களைச் சிவபெருமான் தமது பாகம் பிரியாளாகிய உமையம்மைக்கு உபதேசித்தருளினார். இதனை

"வெள்ளி மால்வரைக் கயிலையில் வீற்றிருந்தருளித்
துள்ளுவார் புனல் வேணியார் அருள் செயத் தொழுது
தெள்ளு வாய்மையின் ஆகமத் திறன் எலாம் தெரிய
உள்ளவாறு கேட்டருளினாள் உலகை ஆளுடையாள்"

எனப் பெரியபுராணம் கூறுகிறது. சிவபெருமானிடத்தில் உபதேசம் பெற்ற உமையம்மையினாலே ஆகமங்கள் இவ்வுலகுக்குக் கிடைத்தன என்பது ஆகமங்கள் வந்த வரலாறாகும். சித்தாந்தம், ஆப்தவாக்கியம் என்னும் சிறப்புப் பெயர்களையும் உடையன ஆகமங்கள். அவை காமிகம் முதல் வாதுளம் ஈறாக இருபத்தெட்டாகும்.

சரியை கிரியை யோகம் ஞானம் என நான்கு பாதங்கள் ஆகமங்களில் கூறப்படுகின்றன. சரியை என்பது உடல்தொண்டு. ஆலயத்தைத் தூய்மை செய்தல், நந்தவனம் அமைத்தல், மலர்

எடுத்தல், தொடுத்துக் கொடுத்தல், உழவாரபணி முதலியன. கிரியையாவது ஞானத்தைக் கொடுத்து அஞ்ஞானத்தைக் கெடுத்தலாகிய தீக்ஷையைக் குருவினிடமாகப் பெற்றுக்கொண்டு, மனவாக்குக் காயங்களால் ஒன்றியிருந்து சிவபூசை செய்தல், யோகமாவது இயமம் (கெடுதலைத் தள்ளுதல்), நியமம் (நல்லதைக் கொள்ளுதல்) ஆஸனம் (பத்மாஸனம் முதலாகிய யோகாசனங்கள் ப்ராணாயாமம் (மூச்சைக் கட்டுதல்), ப்ரத்யாஹாரம் (மனதை அகமுமாகச் செலுத்துதல்), தாரணை, (பூதசுத்தி), தியானம் (மனத்தால் வழிபடுதல்) ஸமாதி (அசைவற்றிருத்தல்) என்பவற்றை குருமுகமாக முறையாகப் பயிலுதல். இம்மூன்று நிலைகளினாலும் பக்குவப்பட்ட ஆன்மா அடையும் அனுபவ அறிவே மெய்ஞ்ஞானமாகும். இம்மேலான ஞானம் கைவரப்பெறுதல் வேண்டுமேயானால் சரியை முதலான நிலைகளில் நாம் சரிவரப் பயிற்சி பெற்றுப் பக்குவப்பட வேண்டும் என்பதை ஆகமங்கள் உணர்த்துகின்றன.

இருபத்தெட்டு ஆகமங்களில் தமிழகத்தில் உள்ள பெரும்பாலான திருக்கோயில்களில் காமிகாகம முறைப்படியே பூசைகள் நடைபெறுகின்றன. காமிகம் என்றால் இஷ்டசித்தி என்று பொருள். அஃதாவது விரும்பியதைப் பெறுதல். இஷ்டசித்திகளை அருளிச் செய்யும் சிவபெருமான் தம்மை வழிபடுவோர் இஷ்ட சித்திகளையடையும் பொருட்டு முதலில் 'காமிகம்' என்னும் ஆகமத்தை அருளிச் செய்தார். இவ்வாகமம் ஸ்ரீகண்ட ருத்ரர் , பிரணவர் என்பவருக்கு உபதேசித்து அருளியதாகும்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு பாதங்களையும் உடையது காமிகாகமம், தற்போது கிரியா பாதம் மாத்திரமே கிடைத்துள்ளது. கிரியா பாதம், பூர்வகாமிகம் உத்தரகாமிகம் என இரு பிரிவுகளையுடையது. பூர்வ காமிகாகமத்தில் கர்ஷணம் எனப்படுகிற அஸ்திவாரம் தோண்டுதல் முதல் கிராமம் ஆலயம் இவைகளை நிர்மாணம் செய்யும் முறையையும், சிவலிங்கப் பிரதிஷ்டை செய்யும் முறையையும் கூறப்பட்டுள்ளன. உத்தரகாமிகாகமம் எனும் இந்நூலில் நித்ய நைமித்திக வழிபாடுகளும் காமிய வழிபாடுகளும், பரிவார தேவதைகளைத் தாபிக்கும் முறையையும் மற்றும் பிராயச்சித்த விதிகளும் கூறப்பட்டுள்ளன. பூர்வ காமிகாகமத்தைத் தமிழ்மொழி பெயர்ப்புடன் தென்னிந்திய அர்ச்சகர் சங்கச் செயலர் சென்னை சிவத்திரு. சி.சுவாமிநாத சிவாசாரியார் அவர்கள் 1977 ஆம் ஆண்டு வெளியிட்டிருக்கிறார்கள்.

உத்தரகாமிகாகமம் தகுந்த மொழி பெயர்ப்புடன் இப்போது வெளிவருவது சைவ மெய்யன்பர்களுக்குக் கிடைத்துள்ள பேருதவியாகும். 1899 ம் ஆண்டு சென்னை கோ.சண்முகசுந்தர முதலியார் ஒவ்வொரு படலத்திற்கு மட்டும் பொழிப்புரையுடன் வெளியிட்ட காமிகாகம நூல் கிடைப்பது அரிதாகிவிட்டது.

இந்நிலையில் உத்தர காமிகாகமத்தில் ஒவ்வொரு படலத்திற்கும் கருத்துரையும், ஒவ்வொரு ஸ்லோகத்திற்கும் பொழிப்புரையும் தமிழில் விளக்கம் தரும் நூலாக இந்நூல் வெளிவருவது சிறப்புடையதாகும். மேலும் இந்நூல் 4 வது படலமாகவுள்ள ஸ்நபன விதிப்படலத்தில் எல்லாவகை ஸ்நபனங்களுக்கும் படங்களுடன் விளக்கம் தந்திருப்பது, கலசாபிஷேகம், சங்காபிஷேகம் போன்றவை செய்பவர்களுக்கு மிகவும் பயனுடையதாகும். 20, 23 ஆகிய படலங்களில் சமய விசேஷ நிர்வாண தீக்ஷைகளுக்குத் தெளிவாக விளக்கம் தரப்பட்டுள்ளன. தீக்ஷாமண்டலங்களின் படங்களையும் வெளியிட்டிருந்தால் மேலும் சிறப்பாக அமைந்திருக்கும். 30, 33 வது படலங்களில் பாசுபதாஸ்திரம், சிவாஸ்திரம், ப்ரத்யங்கிராஸ்திரம்,

அகோரமந்திரம், அகோராஸ்த்ரமூர்த்தி, மிருத்யுஞ்சயாஸ்த்ரமூர்த்தி ஆகிய இவர்களைப் படங்களுடன் விளக்கியிருப்பது இதுவரை யாருமே செய்திராத சிறப்பான அம்சங்கள். 24 வது படலமாகிய ஆசார்ய அபிஷேக விதிப்படலத்தின் விளக்கம், எல்லோரும் அவசியம் படித்துத் தெரிந்து கொள்ளவேண்டியதாகும். இதில் 107 வது சுலோகத்தில் "சைவத்திற்குப் புறம்பாக எந்த கர்மாக்களையும், அவை வைதீக கர்மாக்களாக இருப்பினும் அவற்றைச் செய்யக்கூடாது. ஒருபோதும் சைவர்கள் சமய அனுட்டானங்களை விடக்கூடாது என்று கூறியிருப்பதை எல்லோரும் கவனத்தில் கொண்டு கடைப்பிடிக்க வேண்டியது இன்றியமையாததாகும்.

சிவபெருமானுடைய அங்கங்களாக காமிகாதி ஆகமங்கள் அமைகின்றன. "காமிகம் பாதயுக்மகம்" என்று காமிகாகமம் பாத கமலங்களாக ஓரிடத்திலும் "காமிகம் ஊர்த்வ மகுடம்" என்று காமிகாகமம் ஈசான முகத்தில் மகுடமாக அமைகிறது என்று ஓரிடத்திலும் கூறப்பட்டிருப்பதைக் கருத்தில் கொண்டு, அவை சிருஷ்டிக் கிரமம், ஸம்ஹாரக்கிரமம் என்ற பிரிவுகளின்படி கொள்ளவேண்டும் என்று இரு இடங்களில் விளக்கம் தந்திருப்பதும் 137வது சுலோகத்தில் சில திரவியங்களை தனதாக்கிக் கொள்ள எண்ணுவது மிகப்பெரிய பாவம் என்று விளக்கம் தந்திருப்பதும் அனைவரும் உணர்ந்து செயல்படத் தக்க உண்மைகளாகும்.

மேலும் பல அற்புத விளக்கங்களுடன் வெளிவரும் இந்நூல் சைவ மெய்யன்பர்களுக்கு குறிப்பாக ஆதிசைவ அந்தணர்கட்கும், மாணாக்கர்கட்கும் பேருதவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. இந்நூலை தமது அனுபவ ஞானத்தினாலும் அயராத உழைப்பினாலும் தனது ஆயுட்சிறப்புப் பணியாக மொழிபெயர்த்து வெளியிடும் சிவஆகம சீலரும், அல்லூர் வேதசிவாகம பாடசாலைத் தலைமையாசிரியருமாகிய சிவ ஸ்ரீ ஏ.வி.விஸ்வநாத சிவாசாரியார் அவர்களின் பணி மிகவும் போற்றத்தக்கது. இதுபோல் இன்னும் பல அரிய ஆகமக் கருவூலங்களைத் தமிழில் வெளியிட அவர்கட்கு நீண்ட ஆயுளையும் இஷ்டசித்திகளையும் அருளுமாறு செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

"ஆகமமாகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க"

PHONE : 56655

"KAILAI MA MUNIVAR"
THIRU VALAR THIRU KASIVASI
MUTHUKUMARASWAMI TAMBIRAN
SWAMIGAL



SIVA SIVA

HEAD OF KASITHIRU MADAM
TIRUPANANDAL - 612 504.
THANJAVUR DISTRICT.

DATE : ________________

ஆகமம் என்பதற்குத் தொன்றுதொட்டு வருவது என்பது பொருள்.

ஆகமம் இறைவனாலேயே அருளப்பெற்றதென்பது சைவ நூல்களின் முடிவு.

"மன்னு மாமலை மகேந்திர மதனில்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளி"

என்பதும்,

"எண்ணிலாகமம் இயம்பிய இறைவர்"

என்பதும் திருமுறைகளாகும். மூல ஆகமங்கள் கிரந்த மொழியிலேயே உள்ளன. கிரந்தமும் தமிழ் என்பது ஆன்றோர்முடிவு.

கிரந்தத்தில் உள்ள ஆகமத்தின் பொருள் எல்லோராலும் விளங்கிக் கொள்ள இயலாது.

சிவாகமங்கள் பரமேஸ்வரனுடைய ஈசான முகத்திலிருந்து உண்டானது. காமிகாகமம் முதல் வாதுளாகமம் முடிய மூலாகமங்கள் இருபத்தியெட்டு. மூலாகமங்களின் முதலாவது ஆகமமாகிய காமிகாகமம், பூர்வபாகம், உத்திரபாகமென [illegible] பிரிவுகளாக இருக்கின்றன. பூர்வகாமிகாகமம் நூறு ஆண்டுகளுக்கு முன்பே தமிழாக்கம் செய்து, திருவாளர் ஷண்முகசுந்தர முதலியார் பதிப்பகத்தில் வெளியிடப்பட்டுள்ளது. உத்திரகாமிகாகமம் தொண்ணூற்றியெட்டுப் படலங்களாக உள்ளன. ஏழாயிரத்து நூற்றியிருபத்தியெட்டு ஸ்லோகங்கள் உள்ளன. இந்த உத்திரகாமிகாகமத்தை ஸ்ரீகாஞ்சிகாமகோடி பீட வியாஸபாரதி கலாதி ஸதஸ் ஸமாஜ வேதசிவாகம பாடசாலை முதல்வர் சிவாகம கலாநிதி டாக்டர் வி.விஸ்வநாத சிவாச்சார்யார் அவர்கள் ஓர் வல்லுநர் குழு அமைத்து மூலாகமத்தின் கருத்துக்குச் சிறிதுகூட மாறாமல் நமது தமிழக அரசின் உதவியால் உத்தரகாமிகாகமத்தை வெளியிடுவது அறிந்து நாம் மகிழ்கின்றோம். இந்த ஆகமம் மக்கள் அனைவருக்கும் பயன்படும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆலயங்களின் பூசை முறைகளையும் திருவுருவ அமைப்புகளையும் இந்த நூலில் செவ்வனே விளக்கப்பட்டுள்ளன. இதனை மொழிபெயர்த்த சிவாகம கலாநிதி டாக்டர் வி.விசுவநாத சிவாச்சாரியாரின் முயற்சியும், இந்நூலை வெளியிடும் அரசின் தொண்டும் பெரிதும் பாராட்டுக்கு உரியன.

இதனை மேற்கொண்டு நாடும் மக்களும் பெரிதும் பயன்படச் செந்திலாண்டவன் திருவருளை நினைந்து வாழ்த்துகின்றோம்.

சிவசிவ.

श्रीगणाधिपतये नमः
शिवाभ्यां नमः

## प्रथमः पटलः

# पश्चिमद्वारार्चन विधिः

प्रथमे पटले - पश्चिमद्वारहर्म्ये लिङ्गे सकले मुखलिङ्गे च गृहस्थाश्रमिणा शिवविप्रेण कर्तव्यःपरार्थयजनविधिः प्रतिपाद्यते । तत्रादौ पश्चिमद्वारहर्म्ये परार्थयजनं राजराष्ट्र - समृद्धिजनकं भुक्तिमुक्तिफलप्रदं च भवतीति फलनिरूपणम् । शिवविप्रेण प्रतिदिनं प्रातरावश्यकशौचस्नानकरणानन्तर द्विजत्वसंपत्तिसिद्धयेऽवश्यकर्तव्यस्य संध्यावन्दनकर्मणः प्रतिपादनम् ।आवश्यकशौचस्नानहोमादिविषये, द्विजानां कर्तव्यत्वेन विहितस्य श्रुतिस्मृत्यादिसंसिद्धिकर्मणोऽनुष्ठानं शिवविप्रेण कर्तव्यं वा न वेति विकल्पः प्रदर्शितः। स्वशास्त्रोक्तसंध्यामन्त्रादितर्पणविधानानन्तरमेव, शिवविप्रेण, परार्थयजनाय, देवालयप्रवेशः कर्तव्य इति उच्यते। ततआत्मस्थानद्रव्यमन्त्रलिङ्गशुद्ध्याख्यासु पञ्चशुद्धिषु मध्ये प्रथमा आत्मशुद्धिर्निरूप्यते । तत्र, करन्यासपूर्वकं द्वादशान्तस्थशिवेन सह जीवस्य योजनरूपमात्मयोजनं, भूतशुद्धिः, करन्यासाङ्गन्यासाष्टत्रिंशत्कलान्यासादिभिरात्मनः शैवतनुकल्पनप्रकारः, अन्तर्यागकरणप्रकारइत्यादि विषयाः प्रतिपाद्यन्ते । ततः स्थानशुद्धिर्द्रव्यशुद्धिश्च कथ्येते । तत्र द्रव्यशुद्धिप्रतिपादने प्रसङ्गात् पाद्याचमनार्घ्येषु विषये उत्तममध्यमकन्यसप्रकारा अभिहिताः। ततो मन्त्रशुद्धिः प्रतिपाद्यते ।ततः सामान्यार्घ्यसंपादनद्वारपूजनयोर्निरूपणम् । ततो लिङ्गशुद्धिप्रकारो विधीयते । अत्र द्वारपूजनानन्तरं वा पञ्चशुद्धिः करणीयेति विकल्पः सूच्यते । तत आसनकल्पनप्रकारोनिरूप्यते। तत्र अनन्तासन - सिंहासन - योगासन - पद्मासन - विमलासनानां स्वरूपवर्णनम्, स्नानावाहनकालादौ पृथगेतेषामासनानां विनियोग इति कथनं च दृश्यते । ततःपञ्चब्रह्मन्यासाष्टत्रिंशत्कलान्यासादिभिर्मूर्तिकल्पन - प्रकारोऽभिधीयते ।ततः आवाहन स्थापन संनिधान संनिरोधन अवकुण्ठन अमृतीकरणाख्य मुद्राप्रदर्शन पाद्य, आचमन अर्घ्ये पुष्पदानान्ता दशसंस्काराः कर्तव्या इत्युच्यते। गन्धपुष्पधूपदीपाद्युपचारैः शिवं पूजयेदित्युच्यते। ततआमन्त्रणहविःप्रदानभूषणप्रदानआरात्रिकप्रदर्शनप्रकाराः कथ्यन्ते । एवं दर्पणदर्शनं छत्रचामरनिवेदनं च कर्तव्यमित्युच्यते । रात्रौ दीपदानावसाने नीराजनं कर्तव्यं इति सूच्यते ।महाहविर्निवेद्यान्ते बलिहोमौ समाचरेदिति भण्यते । स्नपनकाले मन्त्रगानं वा वीणागानमथवा, वेदाध्ययनं स्तोत्रपाठादिकं वा विधेयम् । तदूर्ध्वं गौडभाषाद्यैर्गानं धूपान्तमाचरेदिति स्नपनकालेविधेयस्य गानविधेः प्रदर्शनम् । ततो गीतसहित - नृत्तविधिनिरूपणम् । तत्र द्राविडभाषोत्थगानयुतमथवासंस्कृततदपभ्रंशभूतभाषोत्थगानयुतं अष्टादशभाषोत्थागानयुतं वा नृत्तमाचरेदित्युच्यते । रुद्रकन्यालक्षणं चाभिधीयते । ततो नित्योत्सवशुद्धनृत्तयोर्विधेयत्वेनसूचनम् । अन्ते च चुलुकोदकविसर्जनं कर्तव्यमित्युच्यते । एवं यजनविधौ क्रियाकलापःप्रादर्शि । ततः साधकेन सिद्ध्यर्थमाचरणीयस्य यजनविशेषस्य सूचनं दृश्यते । ततः शुद्धैःशैवोक्तैः केवलैमन्त्रैर्यजनमुत्तमं, शैवैर्वेदोत्थैश्च मन्त्रैर्यजनं मध्यमं, केवलैर्वैदिकैर्मन्त्रैर्यजनमधममिति यजनविषये त्रैविध्यप्रतिपादनम् । ततः शैवमन्त्राणांप्राशस्त्यकथनम् । तत्र

बीजमन्त्रसमुद्भूता रुद्राध्यायादयः । अतो रुद्राध्यायादिस्थाने बीजमन्त्रं विनियोजयेदित्युच्यते । ततः पूर्वोक्तो यजनप्रकारः पूर्वास्यके दक्षिणास्यके कौबेरास्यके हर्म्ये लिङ्ग - सकल - मुखलिङ्ग - विषयेषु समान एव इत्युक्त्वा पश्चिमद्वारहर्म्ये कर्तव्यो विशेषः प्रतिपाद्यते । तत्र द्वाराभिमुख्येन देवस्योर्ध्वमुखकल्पनं, मनोन्मन्या देवस्य वामे, वा दक्षिणे वा स्थापनं, देव्या द्विहस्तैकमुखान्वितत्वं, तथा गर्भावरण विद्येशावरण - गणेशावरण लोकेशावरणास्त्रावरणविषये कर्तव्यस्य विशेषस्य प्रतिपादनं, देवाग्रे वृषभ-शूलध्वजस्थान-गोपुराणां कल्पनं, परिवारार्चने विशेषप्रतिपादनं, ईशानदेशे चण्डेशस्थानकल्पनं, याम्ये विघ्नेशस्थानकल्पनमित्यादि विशेषाः प्रदर्शिताः । अन्तेऽन्यत्सर्वं पूर्वद्वारार्चनेन समानमित्युक्तम् । एवं प्रथमपटलार्थसंग्रहः ॥

முதலாம் படலம்

## மேற்கு வாயில் பூஜாமுறை.

இந்த முதலாவது படலத்தில் மேற்கு நோக்கி இருக்கும் திருக்கோயில் லிங்கத்திலும், ஸகள வடிவத்திலும், முகலிங்கத்திலும் க்ருஹஸ்தாச்ரமத்தை உடைய சிவாச்சார்யனால் பரார்த்த பூஜா முறை செய்யத் தகுந்தது என நிருபணம் செய்யப்படுகிறது. முதலில் மேற்கு நோக்கி இருக்கின்ற திருக்கோயில்களில் பரார்த்த பூஜை செய்வதால் அரசன், தேசம், இவைகளுக்கு பூர்ண நிறைவையும், போகம், முக்தியையும், பலன் கொடுக்கக்கூடியதாக பலன்கள் நிருபணம் செய்யப்படுகிறது. சிவஸ்வரூபியனால் தினந்தோறும் காலையில் அவசியமான சௌச ஸ்நானம் முதலியவைகள் செய்த பிறகு த்விஜன் மனுவிற்கு ஏற்பட்ட அவசியம் செய்யவேண்டிய சந்தியாவந்தனம் நிருபிக்கப்படுகின்றன. ப்ராம்மணர்களுக்கு விதிக்கப்பட்ட சௌச, ஸ்நான, ஹோமம், முதலிய விஷயங்களில் ஸ்ருதி, ஸ்மிருதி, முதலியவைகளில் கூறப்பட்ட அனுஷ்டானத்தை, சிவப்ராம்மணனால் செய்ய வேண்டுமா ? வேண்டாமா ? என வித்யாசம் காண்பிக்கப்படுகிறது. தன்னுடைய சாஸ்திரத்தில் கூறப்பட்ட ஸந்தியாமந்திர தர்பண விதிகளுக்கு பிறகே சிவ ப்ராம்மணர்களால் திருக்கோயில் பூஜைக்காக திருக்கோயிலுக்குச் செல்ல வேண்டும் என கூறப்பட்டு இருக்கிறது. பிறகு ஆன்மசுத்தி, ஸ்தான சுத்தி, த்ரவ்ய சுத்தி, மந்திர சுத்தி, லிங்க சுத்தி என்று சொல்லக்கூடிய ஐந்து சுத்திகளின் நடுவில் முதலில் ஆத்ம சுத்தியானது நிருபணம் செய்யப்படுகிறது. அந்த இடத்தில் கரன்யாஸபூர்வமாய் த்வாதசாந்த ரூபமாக ஜீவான்மசேர்க்கையும், பாஞ்ச பௌதிகமான சரீர சுத்தியும், கரன்யாச, அங்கன்யாச, அஷ்டத்ரிம்சத் கலாந்நியாசத்தினால், சரீரத்தை சிவ சரீரமாக கல்பிதமான முறை அந்தர்யாக ப்ரகாரங்கள் என்பது முதலான விவரங்கள் கூறப்பட்டு இருக்கின்றன. பிறகு ஸ்தான சுத்தி த்ரவ்ய சுத்தி கூறப்படுகிறது. த்ரவ்ய சுத்தி நிருபணத்திலே ஸமயத்திற்கேற்ப பாத்யம், ஆசமனம், அர்க்யங்கள், விஷயத்தில் உத்தம மத்யம, அதம முறைகள் கூறப்பட்டு இருக்கின்றன. பிறகு மந்திர சுத்தி கூறப்படுகிறது. பிறகு சாமான்யர்க்யம் சேர்ப்பது. வழியாக பூஜைகள் நிருபிக்கப்படுகிறது. பிறகு லிங்க சுத்தி முறையானது விதிக்கப்படுகிறது. அந்த இடத்தில் த்வார பூஜை செய்தபிறகு தான் ஆசன கல்பனை முறையை நிருபிக்கப்படுகிறது. பிறகு லிங்க சுத்தி முறையானது விதிக்கப்படுகிறது. அந்த இடத்தில் த்வார பூஜை செய்து பிறகு தான் பஞ்ச சுத்தி செய்யவேண்டும் என்பதை தெளிவுபடுத்துகிறது. பிறகு ஆசன கல்பனை முறை நிருபிக்கப் படுகிறது. அங்கு அனந்தாசன, ஸிம்மாஸன, யோகாசன, பத்மாசன, விமலாசனங்களின் ஸ்வரூப வர்ணனம், அபிஷேகம் ஆவாஹன காலங்களில் இந்த ஆசனங்களில் தனித்தனியாக கல்பிக்கும் முறையானது காணப்படுகிறது. பிறகு பஞ்சப்பிரும்ம மந்திரம் அஷ்டத்ரிம்சத் கலான்யாசம் முதலியவை களால் மூர்த்தி கல்பன முறையானது கூறப்படுகிறது. ஆவாஹன, ஸ்தாபன, ஸன்னிதான, ஸன்னிரோதன, அவகுண்டன, அம்ருதீகரண என்று சொல்லக்கூடிய முத்திரைகளை காண்பிக்க வேண்டிய முறை, பாத்யம், ஆசமனம், அர்க்யம், புஷ்பதானமான முடிவை உடைய பத்து சம்ஸ்காரங்கள்

செய்யவேண்டும் என கூறப்படுகிறது. கந்தம், புஷ்பம், தூபம், தீபம் உபசாரங்களினால் சிவனை பூஜிக்கவேண்டும் என கூறப்படுகிறது. மந்திர பூர்வமான நைவேத்யம் முக்யமான ஆபரண அர்ப்பணம் தீபாராதனை முறைகள் கூறப்படுகின்றன. கண்ணாடி, குடை, சாமரம், காண்பிப்பது செய்ய வேண்டும் என கூறப்படுகிறது. இரவில் தீபதான கடைசியில் நீராஜனம் செய்யவேண்டும் என கூறப்படுகிறது. மஹா ஹவிர் நிவேதனத்திற்கு பிறகு பலி, ஹோமங்கள் செய்ய வேண்டும். ஸ்நபன காலத்தில் மந்திரம், வீணாகானம் வேதாத்யயனம், ஸ்தோத்திர பாடம் முதலியவைகள் கூறப்படுகிறது. அதற்குமேல் சகல விதமான பாட்டுக்கள், தூபம் முடிவாக அபிஷேக காலத்தில் பாடவேண்டிய முறையானது காண்பிக்கப்படுகிறது. பிறகு பாட்டோடு கூடிய நாட்டிய விதியானது விதிக்கப்படுகிறது. தமிழ்பாஷைகளோடு கூடிய பாட்டோ, ஸம்ஸ்ருத பாஷை முதலிய பதினெட்டு பாஷை பாட்டோடு கூடியதாகவோ, நாட்யம் செய்யவேண்டியது என கூறப்பட்டு இருக்கிறது. அடுத்து ருத்திர கன்னிகையின் லக்ஷணம் கூறப்படுகிறது. முடிவில் கலசோதக விசர்ஜனம் செய்யவேண்டும். இதன்படி பூஜா முறையின் கிரியா கலாபங்களை காண்பிக்கப்பட்டது. ஸாதகனால் ஸித்திப்பதற்காக பூஜை முறையினுடைய விதியானது கூறப்படுகிறது. பிறகு சிவாகமத்தில் கூறப்பட்ட மந்திரங்களினால் மட்டும் செய்யப்படுகின்ற பூஜை உத்தமமாகும். சிவாகமங்களில் கூறப்பட்டதும் வேதத்தில் சொல்லப்பட்டதுமான மந்திரங்களினால், செய்யப்படும் பூஜை மத்யமமாகும். வேதத்தில் சொல்லப்பட்ட மந்திரத்தினால் மட்டும் பூஜை செய்வது அதமம் என பூஜா விஷயத்தில் மூன்று தன்மைகள் கூறப்பட்டு இருக்கிறது. பிறகு சைவ மந்திரங்களினுடைய உயர்வுகள் கூறப்படுகின்றன. பீஜ மந்திரங்களிலிருந்து உண்டானது ருத்திராத்யாயம் என கூறப்படுகிறது. ஆகையினால் ருத்திராத்யாய ஸ்தானத்திலே, பீஜ மந்திரம் சொல்லவேண்டும் என கூறப்பட்டு இருக்கிறது. பூஜா முறையானது, கூறப்பட்டு இருக்கிறது. முன்பு கூறப்பட்ட பூஜா முறையானது கிழக்கு, தெற்கு, வடக்கு வாயிலை உடைய கோயில்களில் லிங்கம் ஸகலம் முக லிங்க விஷயங்களில் ஒரே ஆகமத்தால் என கூறப்பட்டு மேற்கு வாசல் உள்ள கோயில்களில் விசேஷமாக செய்ய வேண்டியவைகளை கூறப்பட்டு இருக்கிறது. வாசல் படிக்கு நேராக இருக்கின்ற ஈஸ்வரனுக்கு மேல்முகம் கல்பித்து ஈஸ்வரனுடைய இடது பக்கத்திலோ, வலது பக்கத்திலோ, மனோன்மணியை ஸ்தாபித்து இரண்டுகை ஒரு முகத்தோடு கூடிய தேவியையும் அப்படியே கர்பாவரணம், வித்யேசர்கள் கணேச, லோகேச, அஸ்திர ஆவரண விஷயத்தில், செய்யவேண்டிய விஷயங்கள் கூறப்பட்டு இருக்கின்றது. ஈசனின் முன்னிலையில் வ்ருஷபம், சூலம், கொடிமரம், கோபுரங்கள் செய்ய வேண்டும், பரிவார அர்ச்சனை விசேஷமாக கூறப்பட்டு இருக்கிறது. ஈசான தேசத்தில் சண்டிகேச ஸ்தானம் உண்டா ? என்றும் தெற்கில் விக்னேச ஸ்தானம் கல்பிக்க வேண்டும் என விசேஷமாக கூறப்பட்டு இருக்கிறது. முடிவில் மற்றவையாவும், கிழக்கு வாசல் பூஜையோடு சமானம் என்று கூறப்பட்டு இருக்கின்றது. இந்த ப்ரகாரம், முதல் படல கருத்து சுருக்கமாகும்.

## द्वितीयः पटलः

# दक्षिणद्वारार्चनविधिः

द्वितीये पटले दक्षिणद्वारार्चनविधिः प्रोच्यते । तत्र प्रथमं दक्षिणद्वारार्चाया उत्तमोत्तममध्यमाधमत्वेनप्रकारत्रयमस्ति । प्रतिमा दक्षिणास्या चेदुत्तमोत्तमपूजा कर्तव्या । मुखलिङ्गं दक्षिणास्यं चेन्मध्यमापूजा विधेया । लिङ्गं दक्षिणास्यं यदि भवति, तत्राधमा पूजा कर्तव्येति पूजायां प्रकारत्रयं सूचितम् । प्रतिमासु मध्ये नृत्तमूर्तेर्दक्षास्यत्वेन यजनमतिशोभनमित्यभिधीयते ।पश्चिमाभिमुखं लिङ्गं दक्षास्यं बेरं च श्रेष्ठमिति

कथ्यते । अव्यक्तं लिङ्गं मोक्षदं, व्यक्तं बेरं भूतिदायकं, मिश्रं मुखलिङ्गं भुक्तिमुक्तिप्रदमिति यजनफलं निरूप्यते ।

आचार्यः शौचाचमनस्नानसंध्योपासनानि कृत्वा, दक्षिणद्वारमाश्रित्य शिवार्घ्यहस्तो द्वारमस्त्रेणसंप्रोक्ष्य द्वारपानर्चयेदित्युक्त्वा द्वारदेवतार्चनप्रकारोऽभिधीयते ।

ततो दक्षिणास्यकलिङ्गविषयेऽर्चनप्रकारो निरूप्यते । तत्र गर्भावरण विघ्नेशावरण गणेशावरण लोकेशावरणास्त्रावरणपूजाविषये विशेषः प्रतिपाद्यते । अत्र बहवो विकल्पाः प्रदर्शिताः । वृषभबलिपीठध्वजादीनां दक्षिणदिशिस्थानं कल्पनीयम् । अन्यत्सर्वं प्राग्वदेवविधेयमित्युच्यते ।

ततो दक्षिणद्वारार्चनविषये बेरार्चनप्रकारः संग्रहेणाभिधीयत इति प्रतिज्ञा । तत्र लोहजे, शैलजे, मृन्मजे धातुजे, रत्नजे, चित्रहीने शिलाबिम्बे च मूललिङ्गवत्पूजा कर्तव्या । रत्नजे लोहजे, पक्वमृन्मये च बेरे बेरशोधनमिष्टदिवसे विधेयम् । यदा बेरं सधूसरं भवति, तदा वस्त्रसंमार्जनं कर्तव्यम् । पुण्यदिवसे स्नपनं कर्तव्यमित्यादिविषयाः प्रतिपाद्यन्ते ।बेरार्चनविषये आसनकल्पने विद्यादेहकल्पने च विधेयो विशेषोऽभिधीयते । ततः प्रतिमानां विषये विशेषेण कलान्यासः समाख्यात इति सूच्यते । प्रतिमालक्षणोक्तवत्तासां ध्यानं कर्तव्यमित्युच्यते ।तत आवाहन - स्थापन - संनिधान - निरोधनेषु विषयेऽनुष्ठेयो विशेषः प्रतिपाद्यते । तथा पाद्याचमनार्घ्यप्रदानविषये च कर्तव्यो विशेषश्च कथ्यते । तत्र पाद्यादिविषये प्रोक्तसर्वद्रव्यसंयुक्तंश्रेष्ठं, एकद्रव्यहीनं मध्यमं, द्रव्यद्वयहीनं कन्यसं, द्रव्यत्रयहीनं नीचमिति चोक्तम् ।गन्धपुष्पधूपदीपनैवेद्यताम्बूलानि मूलमन्त्रेण दातव्यानि । यथाकालं बलिहोमनित्योत्सवनृत्तानि विधेयानीति च सूच्यते । तत उत्तमोत्तममध्यमाधमपूजासु विषये कालः प्रतिपाद्यते । लिङ्गविषये प्रतिमाविषये च कर्षणादिप्रतिष्ठान्तं सर्वं कर्म तथा संवत्सरोत्सवपवित्रारोहणमासार्चानाङ्कुरार्पणनित्यार्चनादिकं तन्त्रेऽस्मिन्यथाप्रतिपादितं तथा सर्वं समालोच्य विधेयम् । अनेनैव प्रकारेण यथान्यायं सम्यागन्वीक्ष्य देशिकोत्तमेन सौम्यवक्त्रेशपूजाद्यं कर्तव्यमित्युच्यते । अन्ते च यस्य देवस्य यस्यां दिशि मुखं भवति तस्य देवस्य सा दिक् प्राचीति निश्चिता । तद्वशादपरा दिशो दिग्वेदिभिः कल्प्या इत्यभिहितम् । एवंद्वितीयपटलार्थसंग्रहः ।

இரண்டாவது படலம்

## தெற்கு வாயில் பூஜாமுறை

இரண்டாவது படலத்தில் தக்ஷிண த்வாரார்ச்சனை விதி கூறப்படுகிறது. அதில் முதலாவதாக தக்ஷிண த்வாரார்ச்சனையின் உத்தமோத்தமம் மத்யமம் அதமம் என்று மூன்று விதமாக ஆகும். பிம்பம் தக்ஷிணாபிமுகமாயிருப்பின் உத்தமோத்தம பூஜை செய்யவும், முகலிங்கம், தக்ஷிணாபிமுகமாயிருப்பின் மத்யம பூஜை, லிங்கம் தக்ஷிணாபிமுகமாயிருப்பின் அதம பூஜை செய்யவும் என்று பூஜையின் மூன்று விதி கூறப்பட்டுள்ளது. பிம்பங்களில் நடராஜரை தக்ஷிணாபிமுகபிம்பம் ச்ரேஷ்டம் எனப்படுகிறது. அவ்யக்த லிங்கம் மோக்ஷத்தையும், வ்யக்த பிம்பம் ஐஸ்வர்த்தையும், மிஸ்ரமான முகலிங்கம் புத்தி முக்தியையும் அளிக்கும் என்பதாக பூஜாபலம் நிருபிக்கப்படுகிறது.

ஆசார்யன் செளசாசமன, ஸ்நான, ஸந்த்யோபாஸநம் செய்து, தக்ஷிணத்வாரமடைந்து சிவார்க்ய ஹஸ்தராக த்வாரத்தை அஸ்த்ர மந்திரத்தால் ப்ரோக்ஷித்து த்வாரபாலர்களை பூஜிக்கவும். என கூறி

த்வார தேவதார்ச்சனை ப்ரகாரம் கூறப்படுகிறது. பிறகு தக்ஷிணாபிமுகலிங்கத்திற்கு அர்ச்சனை விதி நிருபிக்கப்படுகிறது. அதில் கர்ப்பாவரண, வித்யேசாவரண, கணேசாவரண லோகேசாவரண, அஸ்த்ராவரண பூஜையில் விசேஷம் ப்ரதி பாதிக்கப்படுகிறது. அதில் லோஹஜம், சைலஜம், ம்ருண்மயம், தாருஜம்ரத்னஜம், சித்ராஹ்நிசிலாபிம்பம் இவைகளில் மூலலிங்க பூஜைபோல் செய்யவும். ரத்னஜம்லோஹஜம், பக்வம்ருண்மயபேரம் இவைகளுக்கு இஷ்டமான தினத்தில் பேரகத்தி செய்யவும், பிம்பம் தூசியுடன் இருந்தால் வஸ்த்ரத்தால் துடைக்கவும், புண்ய தினங்களில் ஸ்நபனம் செய்யவேண்டுமென சொல்லப்படுகிறது. பிம்ப அர்ச்சனை விஷயத்தில் ஆஸன கல்பனம் வித்யாதேஹ கல்பன விதிக்கான விசேஷம் கூறப்படுகிறது. ப்ரதிமை விஷயத்தில் விசேஷமாக கலாந்யாஸம் கூறப்படுகிறது. ப்ரதிமை லக்ஷணபப்படி அவைகளின் த்யானம் செய்யவேண்டுமென சூசிக்கப்படுகிறது. பிறகு ஆவாஹன ஸ்தாபன, ஸந்நிதான, ஸந்திரோதனங்களில் விசேஷ அனுஷ்டானம் கூறப்படுகிறது. அவ்வாறே பாத்யாசமநார்க்ய ப்ரதாந விஷயத்தில் செய்யப்படுகிற விசேஷம் நிருபிக்கப்படுகிறது. பாத்யாதி விஷயத்தில் கூறப்பட்டுள்ள எல்லா த்ரவ்யமும் உள்ளது ச்ரேஷ்டமாகும். ஒரு த்ரவ்ய ஹீநம் மத்யமம் இருத்ரவ்ய ஹீநம் கந்யஸம் மூன்று த்ரவ்ய ஹீநம் நீசமாகும். புஷ்பதூபதீபநைவேத்ய தாம்பூலங்கள் மூலமந்திரத்தால் கொடுக்கப்படவேண்டும். காலக்ரமப்படி பலிஹோம நித்யோத்ஸவ ந்ருத்தங்கள் செய்யவேண்டும் என சூசிக்கப்படுகிறது. பிறகு உத்தமோத்தம மத்யமாதம பூஜைகளின் காலம் ப்ரதி பாதிக்கப்படுகிறது. லிங்க விஷய, ப்ரதிமா விஷயத்தில், கர்ஷணாதி ப்ரதிஷ்டாந்தமான எல்லா கர்மாவும், அவ்வாறே ஸம்வத்ஸரோத்ஸவ, பவித்ராரோஹந மாஸார்சந அங்குரார்ப்பண நித்யார்ச்சநாதிகள், இந்த தந்திரத்தில் எவ்வாறு கூறப்பட்டுள்ளதோ அவ்வாறே ஆலோசித்து செய்யவும். இவ்வாறான ப்ரகாரமாக நன்றாக கவனித்து தேசிகோத்தமன் உத்தராபி முகலிங்காதி பூஜைகள் செய்யவேண்டுமென கூறப்படுகிறது. முடிவில் ஸ்வாமிக்கு எந்த திக்கில் முகமுள்ளதோ அந்த திக்கே ஈசனுக்கு பூர்வம் என்று நிச்சயிக்கப்பட்டுள்ளது. அந்த திசையில் வசத்தால் மற்ற திசைக்கள் கல்பிக்கவும் என்று கூறப்பட்டுள்ளது. இவ்வாறு இரண்டாம்படல கருத்து தொகுப்பாகும்.

## तृतीयः पटलः

# सकलार्चनविधिः

तृतीये पटले, सकलार्चनविधिरुच्यते । सकलार्चनं सर्वाभीष्टफलप्रदमित्युच्यते । आचार्यःशौचाचमनस्नानसंध्यावन्दनतर्पणानि कृत्वा, प्रासादं प्रविश्य, पादौ प्रक्षाल्याचम्य भस्मधारणंकुर्यादित्युच्यते । तत आत्मशुद्धिविषये कर्तव्याः क्रिया निरूप्यन्ते । तत्र करन्यासपूर्वकमात्मनःशिवे योजनं भूतशुद्धिरात्मनः शिवतनुकल्पनप्रकार इत्येते विषयाः प्रतिपाद्यन्ते । तत्र करन्यासविषये विशेषस्तथाकलान्यास[illegible]ने कर्तव्य एकत्रिंशत्कलान्यासश्च सूचितः । ततःस्थानशुद्धिर्द्रव्यशुद्धिमन्त्रशुद्धिप्रकाराः संक्षेपेण निरूप्यन्ते । ततो द्वारपूजा, देहशुद्धिप्रकारश्चाभिधीयते । तदनन्तरमासनकल्पनप्रकारस्तत्र मूर्तिकल्पनप्रकारश्च निरूप्येते । तत्र विद्यादेहकल्पनप्रकारो विशेषेण प्रतिपाद्यते । ' सदाशिवो महेशो रुद्रश्चेतित्रिधाशिवदेहः प्रोक्तः ।अयमेव विद्यादेह इति व्यपदिश्यते । शिवस्य समवायिनि विमला शक्तिः सदाशिवतनुर्मता ।माहेश्वरी मूर्तिः सौम्यस्वरूपिणी । या रौद्रीमूर्तिः सा उग्रस्वरूपिणी । ब्रह्मा, विष्णु, रुद्रःमहेशः, सदाशिवः' एते कारणदेवा इत्युच्यते । सदाशिवदेहसिद्ध्यर्थमष्टत्रिंशत्कलान्यासःकर्तव्यत्वेन मतः । रुद्रेशयोः शरीरसिद्ध्यर्थमेकत्रिंशत्कलान्यासः कर्तव्य इत्यादिविषयाःप्रतिपाद्यन्ते । अष्टत्रिंशत्कलान्यासः प्राक् प्रतिपादित इत्युक्त्वा, एकत्रि-

शत्कलान्यासप्रकारो वर्ण्यते ।ततः सदाशिवमहेशनृत्तमूर्त्यादीनां ध्यानविषयः प्रतिपाद्यते । एवं कालान्तक गजघ्नादिमूर्तीनांध्यानविषयश्च प्रोच्यते । ततः पूर्वोक्तानामावाहनप्रकारः संक्षेपेण सूच्यते । ततः स्थापनादिकं तथा पाद्यादिकं गन्धपुष्पधूपदीपनैवेद्यं च सर्वं लिङ्गार्चनोक्तवत्कर्तव्यमिति सूच्यते । ततःपञ्चावरणार्चनमथवा चतुस्त्रिद्व्येकावरणेष्विष्टावरणार्चनं प्रागुक्तवद्विधेयमित्यावरणार्चनप्रकारःसूचितः । ततः स्वतन्त्रालये परिवारयुते बलिं समाचरेत् । अत्र होमो नित्योत्सवो वापिकर्तव्यः । अत्रानुक्तं शुद्धनृत्तादिकं सर्वं लिङ्गार्चनोक्तवत्कर्तव्यम् । शुद्धनृत्तं विना सर्वं कर्मापि वा विधेयमित्यत्र विकल्प उक्तः । नटेशस्य प्रदोषादौ नीराजनविधिर्विधेय इति सूच्यते । उत्सव- स्नपन, दमनारोपण - पवित्रारोहण - कृत्तिकादीप - वसन्तोत्सव - मासोत्सव - नवनैवेद्यकर्म- प्रायश्चित्तजीर्णोद्धारकर्माणि देवस्य कर्तव्यत्वेन विहितानि सर्वाण्यपि देव्या अपि विधेयानीतिसूचितम् । देवी विषये पूर्वफल्गुनीसंयुक्तेआषाढेऽश्विनीमासे च पूरकर्म कर्तव्यमित्युच्यते । एवंसकलार्चनविषये क्रियाकलापो निरूपितः । महेश्वरविषये गौरीं, सदाशिवविषये मनोन्मनीं, च तत्तन्मन्त्रेणशक्तित्वेन पूजयेत् । गौर्या विषये षड्विंशति- कलान्यासेन मूर्तिकल्पनं कर्तव्यमिति सूच्यते । एवं तृतीयपटलार्थ संग्रहः ।

மூன்றாவது படலம்

# ஸகளார்ச்சனா விதி

மூன்றாம் படலத்தில் ஸகளார்ச்சன விதி கூறப்படுகிறது. ஸகளார்ச்சனம் ஸர்வாபீஷ்டமென கூறப்படுகிறது. ஆசார்யன் சௌசாசமனஸ்நான ஸந்தியாவந்தன தர்பணம் முடித்து ஆலயம் நுழைந்து பாத ப்ரக்ஷாளன ஆசமன பஸ்மதாரணம் செய்யவும் என கூறப்படுகிறது. பிறகு ஆத்மசுத்தி விஷயத்தில் செய்யவேண்டிய க்ரியைகள் நிரூபிக்கப்படுகிறது. பின்பு கரந்யாஸபூர்வம் ஆத்மாசிவயோஜநம் பூதசுத்தி, ஆத்மா சைவதநுகல்பன ப்ரகாரம் இவ்வாறான விஷயங்கள் ப்ரதிபாதிக்கப்படுகிறது. அதில் கரன்யாஸம் அநுஷ்டிக்கப்படுகிறது. பிறகு ஸ்தான சுத்தி, த்ரவ்ய சுத்தி மந்திர சுத்தி ப்ரகாரம் ஸம்க்ஷேபமாக நிரூபிக்கப்படுகிறது. பின்பு த்வாரபூஜை, பேரசுத்தி ப்ரகாரம் கூறப்படுகிறது. பிறகு ஆஸந கல்பன ப்ரகாரம் மூர்த்தி கல்பனம் நிரூபிக்கப்படுகிறது. வித்யா தேஹகல்பனம் விசேஷமாக ப்ரதிபாதிக்கப்படுகிறது. ஸதாசிவன், மஹேசன், ருத்ரன் என மூன்றுவிதமாக சிவதேஹம் கூறப்பட்டுள்ளது. இதுவே வித்யாதேஹமென கூறப்படுகிறது. சிவனுடைய சமயவாமிநியான விமலாசக்தி ஸதாசிவ சரீரமாக கூறப்படுகிறது. மஹேச்வரி மூர்த்தி ஸௌம்யரூபிணி, ரௌத்ரீ மூர்த்தி, உக்ரஸ்வரூபிணி, ப்ரம்மா, விஷ்ணு ருத்ர, மஹேச சதாசிவர் ஆகியவர்கள் காரண தேவர்கள் ஆகும். ஸதாசிவ தேஹத்திற்காக அஷ்டத்ரிம்சத்கலாந்யாஸம் செய்யவேண்டும். ருத்ர ஈசர்களுக்கு சரீரசித்திக்காக ஏகத்ரிம்சத் கலாந்யாஸம் செய்யவேண்டும் என்று ஸ்தான விஷயங்கள் வித்யாதேஹவிஷயத்தில் ப்ரதிபாதிக்கப்படுகிறது. அஷ்டத்ரிம் சத்கலாந்யாஸம் முன்பே கூறப்பட்டதாக கூறி ஏக த்ரிம்சத்கலாந்யாஸம் வர்ணிக்கப்படுகிறது. பிறகு சதாசிவ மஹேச ந்ருத்த மூர்த்திகளின் த்யான விஷயம் ப்ரதிபாதிக்கப்படுகிறது. இவ்வாறு காலாந்தக கஜாரிமூர்த்திகளின் த்யான விஷயமும் கூறப்படுகிறது. பின்பு முன்பு கூறிய மூர்த்திகளின் ஆவாஹநப்ரகாரம் ஸம்க்ஷேபமாக சூசிக்கப்படுகிறது. பிறகு ஸ்தாபனாதிகம், பாத்யாதிகம், கந்த புஷ்ப தூபதீப நைவேத்யமும் எல்லாமும் லிங்கார்ச்சனை விதிப்படி செய்யவும் என சூசிக்கப்படுகிறது. பிறகு பஞ்சமாவரணம் அல்லது நான்கு, மூன்று இரண்டு, ஒன்றாவது ஆவரணங்களில் இஷ்டப்பட்ட ஆவரணார்ச்சனம் முன்பு கூறியபடி உள்ள விதியாகும் என்று ஆவரணார்ச்சனை சூசிக்கப்படுகிறது. பிறகு பரிவாராலய, ஸ்வதந்த்ராலயத்தில் பலி அர்ப்பணிக்கவும். இதில் ஹோமம் நித்யோத்ஸவமாவது செய்யவும். இங்கு கூறப்படாத சுத்த ந்ருத்தாதிகள் எல்லாம் லிங்கார்ச்சனைப்படி செய்யவும். சுத்த ந்ருத்தமின்றி எல்லா கர்மாவும் . செய்யலாம் என்று கல்பிக்கப்

படுகிறது. நடராஜருக்கு ப்ரதோஷாதிகளில் நீராஜன விதி விதிக்கப்படுவதாக சூசிக்கப்படுகிறது. உத்ஸவ ஸ்நபன தமநாரோபண பவித்ராரோஹண க்ருத்திகா தீப, வசந்தோத்ஸவ, மாஸோத்ஸவ நவநைவேத்ய கர்ம, ப்ராயச்சித்த ஜீர்ணோத்தாரண கர்மாக்களில் தேவருக்கு செய்யக்கூடிய விஹிதமான எல்லா கர்மாக்களும் தேவிக்கும் செய்தல் வேண்டும் என்று சூசிக்கப்படுகிறது. தேவி விஷயத்தில் பூரநக்ஷத்திரத்துடன் கூடிய ஆடி மாதத்திலும் ஐப்பசி மாதத்திலும் பூர கர்மவிதி செய்யவேண்டும் என கூறப்படுகிறது. இவ்வாறு ஸகளார்ச்சனை விஷயம் கூறப்பட்டு மஹேச்வர விஷயத்தில் கௌரி. அவ்வாறே சதாசிவ விஷயத்தில் மனோன்மணியையும் அந்தந்த சக்தி மந்திரத்தினால் பூஜிக்கக் கூடிய கௌரியின் ந்யாஸ விஷயத்தில் ஷட்விம்சதி கலாந்யாஸத்தில் மூர்த்தி கல்பனம் செய்தல் வேண்டுமென சூசிக்கப்படுகிறது. இவ்வாறாக மூன்றாவது படல கருத்து தொகுப்பு ஆகும்.

## चतुर्थः पटलः

# स्नपनविधिः

चतुर्थे पटले स्नपनविधिरुच्यते । तत्र प्रथमं अष्टम्यादितिथिषु विषुवायने संक्रमादिकालविशेषेषु, तथा दुर्भिक्षे, भूमिकम्पादिदुर्निमित्ते, ज्वरमार्यादिरोगपीडने अवग्रहे च संजाते तद्दोषनिवृत्त्यर्थं, तथाप्रतिष्ठान्ते, उत्सवान्ते, नित्ये, नैमित्तिके, काम्ये च शंकरस्य स्नपनं विधेयमिति स्नपननिमित्तकथनं तच्च स्नपनमनेकविधमित्युच्यते । महास्नपनकर्मण्यादौ अङ्कुरार्पणं कर्तव्यमिति सूच्यते । ततो मण्डपविधानं तत्संस्कारश्च वर्ण्यते । ततः सूत्रन्यासपुरःसरं पञ्चकलश - नवकलश - पञ्चविंशतिकलश - एकोनपञ्चाशत्कलशस्नपनेषु, कलशस्थापन- विधिर्निरूप्यते । अत्र पञ्चकलशस्नपनात्प्रभृत्येकैकावरणस्याधिक्यकल्पनेन एकोनपञ्चाशत्कलशस्नपनान्तं कलशस्थापनप्रकारो निष्पद्यत इति सूच्यते ।

ततोऽष्टोत्तरशतस्नपनविषये प्रथमप्रकारोऽभिधीयते । तत्र द्वाराष्टकमावरणत्रयं च कल्पनीयमित्युच्यते। ततोऽष्टाधिकसहस्रस्नपनविधौ प्रथमप्रकारो निरूप्यते । तत्रसूत्रन्यासपुरःसरं चतुरश्रे मण्डले चत्वारिंशद्व्यूहाः कल्पनीयाः । तत्र प्रतिव्यूहं पञ्चविंशतिकलशाः स्थापनीया इत्युच्यते ।

ततोऽष्टोत्तरशतस्नपनविषये द्वितीय प्रकारः प्रतिपाद्यते । अत्र चत्वारि द्वाराणि कल्पनीयानि, मध्येपञ्चविंशति कलशाः, कोणेषु एकविंशतिकलशाश्च स्थाप्या इति कलशस्थापनप्रकारः कथितः ।

ततोष्टाधिकसहस्रस्नपनविषये द्वितीयप्रकारोऽभिधीयते । अत्र सूत्रन्यासपुरःसरं चतुरश्रे मण्डले चतुर्दशस्वावरणेषु कलशस्थापनप्रकारः प्रोच्यते ।

ततः कुम्भस्थापनाय स्थण्डिलकल्पनविषये शालिमाननिरूपणं, तदनुसारेण तिलतण्डुलमानककथनं, कुम्भमान करकमानकथनं, कुम्भेषु सूत्रवेष्टनकूर्चन्यासप्रकारकथनं, कुम्भेषु द्रव्यन्यास, रत्नन्यासप्रकार इत्यादिविषया : निरूप्यन्ते ।

ततः पञ्चकलश - नवकलश - पंचविंशतिकलशस्नपनविषयेषु द्रव्यनिरूपणम् ।

